மித்தையெனுஞ் சகத்துநின்பால் விளங்குமோ வெனவினவச்
சுத்திதனி லேரசிதந் தோன்றுதல்போ லென்றவரோ (௬௩)

(இ—ள்.) மித்தையெனுஞ்சகத்து = (சுவானுபூதிமான்களாற்) பொய்யென்று சொல்லப்பட்ட பிரபஞ்சமானது, நின்பால் =தேவரீரிடத்தில், விளங்குமோவென வினவ=தோன்றுமோவென்று தனஞ்சயன்கேட்க, சுத்திதனில் =(மெய்யாயுள்ள) கிளிஞ்சிலினிடத்தில், ரசிதம் =(பொய்யாயுள்ள) வெள்ளியானது, தோன்றுதல்போல்—தோற்றுதல்போல (மெய்யாயுள்ள நம்மிடத்தில் பொய்யாயுள்ள பிரபஞ்சமானது தோன்றியதாம்), என்றவரோ=என்றுரைத்தருளிய பகவானீர்தானே. (எ-று.)

எஞ்சிநின்ற தாஷ்டாந்தங்கள் விரிக்கப்பட்டன.

அயல்வெள்ளி சுத்தியின்மே லாரோ பிதங்கூடு
மியலுள்ள சகமுமுன்வே றிருந்ததுமுண் டோவெனவே. (௬௪)

(இ—ள்.) அயல்வெள்ளி=வேறுயிருக்கின்ற வெள்ளியானது, சுத்தியின்மேல் = கிளிஞ்சிலினிடத்தில், ஆரோபிதங்கூடும் = கற்பிதமாகத் தோற்றுதல்பொருந்தும், (அதுபோல) இயலுள்ளசகமும் = காரணகாரியவொழுங்காயுள்ள பிரபஞ்சமும், முன்=சிருஷ்டிகாலத்திற்குமுன்பு, வேறு இருந்ததுமுண்டோ=பொய்ப்பிரபஞ்சத்துக்கு அன்னியமாக விருந்ததுமுளதோ, என=என்றுகாண்டீபன்கேட்க. (எ-று.)

மனமயக்கம் பிடிக்கிலில்லா வஸ்துவுந்தோன் றிடுமதுவோ
கனவில்விண்ணிற் றான்பறக்கக் கண்டதுபோ லென்றவரோ.()

(இ—ள்.) மனமயக்கம் பிடிக்கில் = மனம்மோகத்தையடையுமானல், இல்லாவஸ்துவுந்தோன்றிடும்=இல்லாதபொருள்களும் பிரதீதியாகும், அது=அங்ஙனம் பிரதீதியாதல், கனவில் = சொப்பனுவத்தையில், விண்ணில்=வானில், தான் = (பறக்குஞ்செயலில்லாதபுருடனுயுள்ள)தான், பறக்கபறந்து செல்வதாகக், கண்டதுபோல் = பார்த்தலைப்போல, (சிருஷ்டிகாலத்திற்கு முன்னில்லாத பிரபஞ்சம் அஞ்ஞானதோஷத்தால் கற்பிதமாகத் தோன்றக்கூடும்). என்றவரோ=என்று பகர்ந்தருளிய பகவானீர்தானே. (எ-று.)



எஞ்சிநின்ற தாஷ்டாந்தங்கள் விரிக்கப்பட்டன.

கனவுபோற்பிரபஞ்சமென்றீர்கண்விழித்தாற் கனவுபொய்யாம்
வினவுசகந் தினமுமெய்யாய் விளங்குவதென் சொல்லுமென. ()

(இ—ள்.) கனவுபோல் பிரபஞ்சமென்றீர்=சொப்பனம் போலப் பிரபஞ்சமும் (பொய்) யென்றுரைத்தீர், கண்விழித்தால்=நித்திரையினின்று நீங்கிச் சாக்கிரத்தையடைந்தால், கனவுபொய்யாம் = சொப்பனம்பொய்யாய்விடுகிறது, (அப்படியில்லாமல்) வினவுசகம்=என்னுற்கேட்கப்பட்ட விச் சாக்கிரப்பிரபஞ்சமானது, தினமும்=நாள்தோறும், மெய்யாய்விளங்குவது =சத்தியமாகப்பிரதீதியாவது, என்=யாதுகாரணம், சொல்லுமென= (இதனைத்தேவரீர் தயவுசெய்து) பகர்ந்தருளவேண்டுமென்று காண்டீபன்கேட்க. (எ-று.)

மெய்யாக விளங்குவது மெய்ஞ்ஞானம் வருமளவும்
பொய்யாம்பின் கனவதுபோற் போதம்வரி லென்றவரோ.(௬௭)

(இ—ள்.) மெய்யாக = (பிரபஞ்சமானது) உள்ளதாக, விளங்குவது=பிரதீதியாகிக்கொண்டிருப்பது, மெய்ஞ்ஞானம் வருமளவும் = உண்மைஞானமுதையமாகும் வரையினுமாம், போதம்வரில் = ஞானமுதையமாகில், பின்=பின்பு, கனவதுபோல்=சொப்பனம் பொய்யாவதுபோல, பொய்யாம் = இச்சாக்கிரப் பிரபஞ்சமு மித்தையாய்விடும், என்றவரோ=என்று பகர்ந்தருளிய பகவானீர்தானே. (எ—று.)

முன்புகண்ட கனவுபொய்யா மொழிசாக்ரம் போலவென்றீர்
பின்புமுத்தித் திசையடைந்தும் பிரபஞ்சநிற்ப தேதெனவே.()

(இ—ள்,) மொழிசாக்ரம்=சொல்லப்படுகின்ற சாக்கிராவத்தையில், முன்புகண்ட = முதலிற்கண்ட, கனவு = சொப்பனமானது, பொய்யாம்போல் = மித்தையாய் விடுவதுபோல், (ஞானசாக்கிரத்தில் பிரபஞ்சமும் மித்தையாய்விடும்) என்றீர்= என்றுரைத் தருளினீர், முத்தித்திசையடைந்தும் = மோக்ஷநிலையையடைந்தும், பின்பு=பிற்பாடும், பிரபஞ்சநிற்பது=பிரபஞ்சம் பிரதீதியாகிக்கொண்டிருப்பது, ஏதென=எதனுலென்று காண்டீபன்கேட்க (எ-று.)

தெரிந்தவர்க்குத் தோற்றுவது தெத்தபடம் போல்வதல்லாற்
பரந்தசகங் காரியத்திற் பயன்படா தென்றவரோ. (௬௯)

(இ—ள்.) தெரிந்தவர்க்கு=(தனது நிசவடிவாய பிரஹ்ம சொரூபத்தை அபரோக்ஷமாக) அறிந்தவர்கட்கு, பரந்தசகம்=நாமரூபமாக விரிந்துள்ள பிரபஞ்சமானது, தோற்றுவது=பிரதீதியாவது, தெத்தபடம் போல்வதல்லால் = (நெருப்பினாற்) றகிக்கப்பட்ட வஸ்திரம்போன்ற தாகுமே யல்லாமல், * ௩௬. காரியத்தில்=(ஜனனமரணமுதலிய) காரியங்களைத் தருதலில், பயன்படாதென்றவரோ=உபயோகப்படாதென் றுரைத் தருளிய பகவானீர்தானே. (எ-று.)

கன்மவினை யஞ்ஞானங் கடந்துமதன் காரியமாம்
புன்மையுறு மெய்யுடனே போகாத தேதெனவே. (௭௰)

(இ—ள்.) கன்மம் || ஆகாமிய சஞ்சிதகன்மங்களும், வினை அஞ்ஞானம்=சர்வகன்மங்களுக்கு முதற்காரணமாயுள்ள அஞ்ஞானமும், கடந்தும்=நிவிர்த்தியாகியும், அதன்காரியமாம்=அவ் வஞ்ஞானத்தின் காரியமாய, புன்மையுறுமெய்=இழிவு பொருந்திய தேகமானது, உடனே=கன்மமும் அஞ்ஞானமும் நிவர்த்தியான அக்கணத்திலேயே, போகாதது ஏதென=ஒழியாதது எதனாலென்று தனஞ்சயன் கேட்க. (எ-று.)

வெட்டவிழு மரம்பசந்து விளங்குதல்போற் சிலகால
நட்டகன்ம மாய்ந்துமங்க நடித்திடுங்கா ணென்றவரோ. (௭௧)

(இ—ள்.) வெட்ட=(ஒருவன்) வெட்டுதலினால், விழும்=சாய்ந்துகிடக்கின்ற, மரம்=விருக்ஷமானது, பசந்துவிளங்குதல்

* ௩௬. நெருப்பினாற் றகிக்கப்பட்ட வஸ்திரமானது வஸ்திரம்போற்றோற்றமாயினும் அங்ஙனந் தோற்றுதல்மாத்திரமல்லது குளிர்நீக்குதல் முதலிய காரியங்கட் குபயோகமாகாதது போலப், பிரஹ்மாத்ம ஐக்கிய ஞானத்தாற் பொய்யென்று தீர்மானிக்கப்பட்ட பிரபஞ்சமானது நாமரூபவடிவமாக ஞானிகட்குத் தோற்றினும், அங்ஙனந் தோற்றுதல் மாத்திரமல்லது பந்தமுதலிய காரியங்களைக் கொடுத்தற் கேதுவாகாமையின், காரியத்திற் பயன்படாவென்றார்.



போல்=(பின்சிறிதுகாலம்) பசுமையாக தோற்றிக்கொண்டிருப்பதுபோல, நட்டகன்மமாய்ந்தும்=(தான்முன்பு) செய்தகன்மம் நாசமாகியும், அங்கம்=(அக்கன்மத்தின் காரியமாய) தேகமானது, நடித்திடும்=தொழிற்பட்டுக்கொண்டிருக்கும், காண்=நீ அறிவாயாக, என்றவரோ=என்று பகர்ந்தருளிய பகவானீர் தானே. (எ-று.)

சென்மம்போய் முத்தியினைச் சேரச் சிலரிருக்கத்
தொன்மையான் மாப்பலவோ சொரூபம் பகருமென. (௭௨)

(இ—ள்.) சென்மம்போய்=பிறப்பொழிந்து, முத்தியினை=மோக்ஷத்தை, சிலர்சேர=சிலர் அடைய, சிலரிருக்க=சிலர் (பந்தமுடையவரா) யிருக்கக் காணப்படுதலால், தொன்மை=அநாதியாயுள்ள, ஆன்மாப்பலவோ=ஆன்மாவானது அநேகமோ, சொரூபம்=ஆன்மாவின் சொரூபமித்தன்மைத்தாமென்பதை, பகருமென=மொழிதல் வேண்டுமென்று தனஞ்சயன் கேட்க. (எ-று.)

பிரமமென்று மீசனென்றும் பெருகுபல சீவனென்று
முரைமயக்க மலதான்மா வொருவனே யென்றவரோ. (௭௩)

(இ—ள்.) பிரமமென்றும்=(நிர்க்குணவடிவமாகிய) பிரஹ்மமென்றும், ஈசனென்றும் = முற்றறிவுடைமை முதலிய குணங்களோடு கூடியுள்ள ஈசுவரனென்றும், பெருகு=(அற்ப அறிவு முதலிய குணங்க) ணிறைந்துள்ள, பல்சீவரென்றும்=அநேகம் ஜீவர்களென்றும், உரை=(பேதப்படுத்திக்) கூறுவது, மயக்கமலது=பிராந்தியே யல்லாமல், (வாஸ்தவம் அல்ல) ஆன்மாவொருவனே=ஆன்மா வொருவனென்று கூறுதலே (வாஸ்தவம்), என்றவரோ = என்றுரைத்தருளிய பகவானீர்தானே. (எ-று.) உரை-முதனிலைத் தொழிற்பெயர்.

ஏகந்தா னான்மா வெனும்வகையே மெய்யானா
லாகந்தோ றும்பலவா யமர்ந்ததென்னே சொல்லுமென. (௭௪)

(இ—ள்.) ஆன்மா=ஆன்மாவானது, ஏகந்தான்=ஒன்றே, எனும்வகையே=என்றுசொல்லும்விதமே, மெய்யானால் = வா

ஸ்தவமானல், ஆகந்தோறும்=தேகங்கள்தோறும், பலவாய்=பல ஆன்மாக்களாக, அமர்ந்திதென்னே=பொருந்தியிருப்பதென்னையோ, சொல்லுமென=(இதனை) மொழிதல்வேண்டுமென்று தனஞ்சயன்கேட்க. (எ-று.)

பலகடத்திற் சலத்தூடு பானுவிம்பந் தோன்றுதல்போற் [றோ.
றொலைவில்புத்தி தொறுமான்மாத் தோன்றுதல் காணென்றவ

(இ—ள்.) பலகடத்தில்=அநேககடங்களிலுள்ள, சலத்தூடு=சலங்களினிடத்தே, பானுவிம்பம்=சூரியபிம்பமானது, தோன்றுதல்போல்=(அநேகமாகப் பிரதிபிம்பத்துத்) தோன்றுகிறதுபோல, தொலைவில் புத்திதோறும்=மோக்ஷ பரிபந்கம் அழிவில்லாத புத்திகள்தோறும், ஆன்மா=(ஒன்றாகவேயிருக்கிற), ஆத்மாவானது, தோன்றுதல்=(பல ஆத்மாக்களாகத்) தோன்றுதலை, காண்=நீயறிந்துகொள்வாயாக, என்றவரோ=என்று மொழிந்தருளிய பகவானீர்தாமே. (எ-று.)

ஆதித்தன் போலான்மா வளவில்புத்தி தொறுந்தோன்றிற்
சாதிக்கு முத்தியெவர் தமக்கதனைச் சாற்றுமென. (௭௬.)

(இ—ள்.) ஆதித்தன்போல=(ஒன்றாகவிருந்தும் உபாதிகளின் பேதத்தாற் பலவாகத் தோற்றுகிற) சூரியனைப்போல, ஆன்மா=ஏகமாயுள்ள ஆத்மாவானது, அளவில்புத்திதொறும்=அளவில்லாத புத்திகளாகியவுபாதிகள்தோறும், தோன்றில்=பலவாகத் தோன்றுமானல், சாதிக்கு முத்தி=சிரவண மனனுதி யப்பியாசத்தா லடையத்தக்க மோக்ஷமானது, எவர் தமக்கு=யாவருக்கு, அதனைச் சாற்றுமென, அதனையுரைத்தருளவேண்டுமென்று தனஞ்சயன் கேட்க. (எ-று.)

பந்தமுத்தி தானுமந்தப் பரந்தபுத்தி தனக்கேயா
மந்தவிம்பந் தனக்கிலையென் றறிவுவரச் சொன்னவரோ. (௭௭.)

(இ—ள்.) * ௫௭. பந்த * ௫௮. முத்திதானும்=பந்தமும் மோக்ஷமும், அந்த=முன் சொல்லிய, பரந்தபுத்தி தனக்கே

* ௫௭. அகங்காரமுதலிய அநாத்மவஸ்துக்கள் பந்தமெனப்படும்.

* ௫௮. சர்வதுக்க நிவிருத்தி பரமாநந்தப் பிராப்தி முந்தி அல்லது மோக்ஷமெனப்படும். அல்லது கர்த்திருத்துவ போக்திருத்துவாதி வேற்றுத் தன்மையை விட்டுத் தனதுசொருபமாக நிலைத்திருத்தல் மோக்ஷமெனப்படும்.





யாம்=(விடயங்களில்) விரிந்து செல்லுகின்ற புத்திதத்துவத்திற்கேயாகும், அந்த=(ஒன்றாகவிருந்தும் புத்திகளாகிய உபாதிகளின் பேதத்தாற் பலவாகத்தோற்றுகிறதென்று) விம்பந்தனக்கு=பிம்பவடிவாய ஆத்மாவிற்கு, இல்லை முன்கூறிய, பந்தமோக்ஷங்களில்லை யென்று அறிவுவர யென்று=மாம் வண்ணம், சொன்னவரோ=பகர்ந்தருளிய முதைய பகவானீர் தாமே. (எ-று.)

பரமேக மாயுமதிற் பலசீவ ரேதெனவே
யொருகடலிற் பலகுமிழி யுதிப்பதுபோ லென்றவரோ (௭௮)

(இ—ள்.) பரம் ஏகமாயும்=பிரஹ்மம் ஒன்றாகவிருந்தும், அதில்=அந்தப் பிரஹ்மத்தில், பலசீவர்=அநேகஞ் சீவர்கள், ஏதென=தோன்றுவதெப்படி யென்று தனஞ்சயன் கேட்க, ஒருகடலில்=ஒன்றாயுள்ள சமுத்திரத்தினிடத்தே, பலகுமிழி=அநேகங் குமிழிகள், உதிப்பது போல்=(வாயுவின் செயலாற் றோற்றல் போல) ஒன்றாயுள்ள பிரஹ்மத்தில் கன்மச் செயலாற் பலசீவர்கள் தோற்றுவார்கள், என்றவரோ=என்று பகர்ந்தருளிய பகவானீர்தாமே. (எ-று.)

சீவனது தானென்றுஞ் சேரும் பிரமமென்று
மாவதுவோ பேரின்ப மாங்கதெனக் கோதுமென. (௭௯)

(இ—ள்.) சீவன்=சீவனே, தானென்றும்=தானென்னுமுணர்ச்சிக்குஞ் சொல்லிற்கும் பொருளென்றும், அது=அச்சீவன், பிரமம்=பிரஹ்மத்தை, சேருமென்றும்=அடையுமென்றும் (சிலர் சொல்லுகிறபடி), ஆவதுவோ=ஆவதுதானோ, பேரின்பம்=பிரஹ்மாநந்தம், அது=அப்பிரஹ்மாநந்தம் (உதையமாகும் விதத்தை), எனக்கு=அடியேனுக்கு, ஓதுமென=பகர்ந்தருளவேண்டுமென்று தனஞ்சயன் கேட்க. (எ-று.)

ஆங்குஅசை. பிரஹ்மமென்பதில் சாரியையும் ஐயுருபுந் தொக்கன.

ஏகம் பிரம மிரண்டிலைநீ வேறுமல
சோகமுறும் பேதமதிற் றோன்றுமின்ப மென்றவரோ. (௮0)

(இ—ள்.) ஏகம்பிரமம்=பிரஹ்ம ஒன்றேயுள்ளதாகும்,
இரண்டிலை=இரண்டாவது பொருளில்லை, நீ=(பிரத்தியகாத்
மாவாகிய) நீ, வேறுமல=அப்பிரஹ்மத்துக்கு அன்னியமுமல்ல,
சோகமுறும்=துக்கம் வந்து பொருந்துதற்கேதுவான, பேத
மறில்=வேறுபாட்டுணர்ச்சி நீங்குமாயின், இன்பம் = பிரஹ்மா
நந்தமானது, தோன்று மென்றவரோ=உதையமாகு மென்று
ரைத்தருளிய பகவானீர்தானே. (எ-று.)

சீவபேதம்போமோ சித்தொன்று மோவெனவே
யாவன்மனமறுஞ்சுழூத்தி யவத்தையிற்பா ரென்றவரோ. ()

(இ—ள்.) சீவபேதம்=சித்தினிடத்திற்றோற்றிய சீவர்க
ளின் பேதமானது, போமோ=நிவிர்த்தியாமோ, சித்து = அங்ங
னம் பேதம் நீங்கப்பெற்ற சித்தானது, ஒன்றுமோ=ஏகமாயி
ருந்து விளங்குமோ, என=என்று தனஞ்சயன் கேட்க, ஆவல்
=விடயங்களில் பற்றுள்ள, மனம்=மனமானது, அறும்=அஞ்
ஞானத்திலொடுங்குகின்ற, சுழூத்தியவத்தையில்=சுழூத்திகால
த்தில், பாரென்றவரோ=பார்ப்பாயாக வென்று பகர்ந்தருளிய
பகவானீர்தானே. (எ-று.)

பேதமல விவ்வுலகம் பிரமமய மென்றறிந்தும்
பூதமய மாய்த்தோற்றல் போகாத தேதெனவே. (அஉ)

(இ—ள்.) இவ்வுலகம்=இப்பிரபஞ்ச மானது, பேதம்
அல=(பிரஹமத்துக்கு) அன்னியமல்ல, பிரமமயமென் றறிந்
தும்=பிரஹ்மசொரூபமே யென்றறிந்திருந்தும், பூதமயமாய்த்
தோற்றல்=பஞ்சபூத ஆகாரமாகத் தோற்றுதல், போகாதது=
நீங்காதது, ஏதென=எதனுலென்று காண்டீபன்கேட்க. (எ-று.)

கானலை நீரென்றோடிக் கண்டவர்க்குத் தீர்ந்தபின்னும்
வானுலவு நீராகி வயங்குதல்போ லென்றவரோ. (அ௩)

(இ-ள்) கானலை=பேய்த்தேரினை, நீரென்றோடி = சல
மென்றுணர்ந்து சென்று, கண்டவர்க்கு = (இது நீரன்றுகான
லென்) றறிந்தவர்க்கு, தீர்ந்தபின்னும் = (நீரென்னுமயக்கம்)
நிவிர்த்தியானபிற்பாடும், உலவு=செல்லுகின்ற, வான் நீராகி =
மேகம்பொழிந்த சலம்போலாகி, வயங்குதல்போல்= பிரதீதியா



வதுபோல, (பிரபஞ்சத்தைப் பிரஹ்மவடிவமாக அறிந்திருக்கி
னும் பஞ்சபூதவடிவமாகத் தோற்றிக்கொண்டிருக்கும்) என்ற
வரோ=என்று பகர்ந்தருளியபகவா னீர்தானே. (எ-று)

எஞ்சிநின்ற தாஷ்டாந்தம் விரிக்கப்பட்டது. மயக்கமென்
னும்பதம் அவாய் நிலையால் வந்தது.

அறிவானு நல்லறிவு மறியப் படும்பொருளும்
பிறிவாய்மூன் றுயிருத்தல் பேதமல வோவெனவே. (அ௪)

(இ-ள்) அறிவானும் = ஞாதிருவும், நல்லறிவும் = நன்மை
யைத்தரும் ஞானமும், அறியப்படும் பொருளும் = அறியப்படு
வதாகிய ஞேயமும், பிறிவாய் =ஒன்றைவிட மற்றொன்று வே
றாய், மூன்றுயிருத்தல் = திரிபுடியாக விருத்தலானது, பேதமல
வோ =(பொருளொன்றே யென்னும் அத்துவித சித்தாந்தத்
துக்கு) விரோதமல்லவோ வென்று தனஞ்சயன் கேட்க. (எறு)

சொப்பனத்திற் றனித்தொருவன் தோற்றம்வே றில்லையங்கே
கற்பனையாம் பொருளறிவு காண்பவன்போ லென்றவரோ. (அரு)

(இ-ள்) தனித்தொருவன் = தனித்து நித்திரைசெய்கின்ற
வொருவனது, சொப்பனத்தில் = சொப்பனுவத்தையில், தோற்
றம்போல = தோற்றுநின்ற திரிபுடிகள் (அச்சொப்பன * ௩௯.
திருஷ்டாவுக்கன்னியமாக வில்லாதன)போல, கற்பனையாம் =
அத்தியாசமாகிய, பொருள் = ஞேயமும், அறிவு = ஞானமும்,
காண்பவன் = ஞாதிருவும், வேறில்லை யென்றவரோ = * ௪0
சாக்ஷிசைதன்னியத்துக்கு அன்னியமாகவில்லையென்று பகர்ந்த
ருளிய பகவானீர்தானே. (எ-று)

அங்கு ஏ அசைநிலைகள்.

கற்பனையாம் பேதங்கள் காணுமற் போம்வகையை
விற்பனமா யானறிய விளம்புமென வேவணங்க. (அசு)

---

* ௩௯. பார்க்கிறவனெவனோ அவன் திருஷ்டாவெனப்படுவன். ஆத்மா எல்லாத் திருசியங்களையும் பார்க்கிறதா யிருத்தலால் திருஷ்டாவாம்.

* ௪0. அறிபவன், அறிவு, அறியப்படுபொருள் முதலியவற்றின் உற்பத்தி நாசங்களையறிவதாய்த், தான் அவ்வுற்பத்தி நாசங்களின்றியதாய்ச், சுயஞ்சோதியாயுள்ள சேதனமெதுவோ, அது சாக்ஷியெனப்படும்.

(இ-ள்) கற்பனைபாம் பேதங்கள் = ஆரோபமாகிய திரிபுடிப்பேதங்கள், காணுமற்போம்வகையை = பிரதீதியாகாமற் போகும் விதத்தை, விற்பனமாய் = விசேஷமாக, யான் அறிய = அடியேன் தெரிந்துகொள்ளும்பொருட்டு, விளம்புமென = பகர்ந்தருளவேண்டுமென்று, வணங்க = காண்டீபன் கைகூப்ப. (எ-று.)

துரியமாம் யோகத்தாற் றூயமனம் லயமானு
லரியமூ வகைவிகற்ப மழியுமென்று சொன்னவரோ. (௬௭)

(இ-ள்) துரியமாம் = நனவிற் சுழுத்தியவத்தையை யடைதற்கேதுவாய, யோகத்தால் = (* சக. லயம் * சஉ. விக்ஷேபம் * சங. கஷாயம் * சச. ரசாஸ்வாதமென்னும் நான்குதடைகளுமில்லாமற்றியானிக்கின்ற) நிதித்தியாசனத்தால், தூயமனம் =

* சக. நித்திராசேடம், அஜீரணம், அதிகபோஜனம் சரீரசிரமமுதலிய வேதுக்களால், ஆலஸ்யம், சோம்பல், நித்திரைமுதலானவைகளுண்டாகின்றன. அதனுல் விருத்தி தனதுபாதானமாகிய அந்தக்கரணத்தி லொடுங்குகிறது. இந்நிலைமைக்கு லயமென்றுபெயராம். இந்த லயத்தால் சுழுத்தியை யொத்த அவஸ்தையுண்டாகிறது. பிரஹ்மாநந்தம் விளங்குகிறதில்லை. ஆதலால் யோகி சாவதானப்பட்டு ஆலஸ்யாதிகளுக்குக் காரணமான நித்திராசேடமுதலானவைகள் நேராமல் முன்சாக்கிரதைப்படுவதுமன்றி, யோகத்திற் பிரவேசித்த அக்காலத்திலும் நித்திரை முதலியவற்றைத் தகைந்து விருத்தியை யெழுப்பவேண்டும். இவ்வாறு லய வடிவ விக்கினத்துக்கு விரோதியான நித்திரை ஆலஸ்யங்களின் நிரோதத்தோடுகூடிய விருத்தியின் பிரவாகவடிவ ஜாகரணத்தி (விழிப்பி)னைக் கௌடபாதாசாரியர் சித்தசம்போதனமென்பர்.

* சஉ. சிட்டுக்குருவிகள் பூனை முதலானவற்றின் பயத்தால் வீட்டிற்குட் பிரவேசிக்கின்றன. அக்காலத்தில் கிரகத்திற்குள் பயக்கிலேசங்களுக்கு இடங்காணப்படுகிறதில்லை. மறுபடியும் வெளியில்வந்து பயத்தை யல்லது மரணவடிவ துக்கத்தை யடைகின்றன. அதுபோல அநாத்மபதார்த்தங்களைத் துக்கமென் றறிந்து அத்வைதாநந்தத்தை விஷயமாக்குவதற்காக விருத்தியந்தர்முகமாகின்றது. அங்கு விருத்திக்கு விஷயமாகுஞ்சேதனம் அதிசூக்ஷ்மமாக விருத்தலால், விருத்தி நிலைபெறுகிறதில்லை. சிறிதுகாலமாவது நிலைத்தாலன்றி அந்



சுத்தமாகியசாத்துவிகமனதும், லயமானுல் = பிரஹ்மசொரூபாகாரமாக ஒடுங்குமானுல், அரிய = (பிறவுபாயங்களால் நீக்குதற்கு) அருமையாயுள்ள, மூவகைவிகற்பம் = திரிபுடிவேறுபாடுகள், அழியுமென்று = தோற்றமின்றிக்கெடுமென்று, சொன்னவரோ = பகர்ந்தருளிய பகவானீர்தானே. (எ-று.)

சிறந்திருக்கு மான்மாவுஞ் செகமெல்லா நிறைந்திருந்து
மறைந்தெனக்குத் தோன்றுத வகையேது சொல்லுமென. (௬௮)

(இ-ள்.) சிறந்திருக்கும் = (சச்சிதாநந்தவடிவமாய்ச்) சிறந்திருக்கும், ஆன்மாவும் = ஆத்மாவும், செகமெல்லாம் = உலகமுழுதினும், நிறைந்திருந்தும் = பூரணித்திருந்தும், மறைந்து = ஒளிந்து, தோன்றுத = பிரதீதியாகாதிருக்கின்ற, வகை = விதம், எது = யாதினுல், சொல்லுமென = அதனைப் பகர்ந்தருளவேண்டுமென்று தனஞ்சயன் கேட்க. (எ-று.)

சத்துச்சித் தானந்தந் தான்மூன்று மதனுடனே
யொத்துற்று நாம வுருவஞ் சகமாகி. (௬௯)

தர்முகமானவுடனே சேதன சொருபானந்தத்தின் லாபமுண்டாகிறதில்லை. அதனுல் விருத்தி பகிர்முகமாகிவிடுகிறது. இவ்வாறு பகிர்முகமாகும் விருத்திக்கு விக்ஷேபமென்று பெயராம். அந்தவிருத்தியின் ஸ்திரத்தன்மையின்றிச் சொரூபாநந்தம் அடையப்படுகிறதில்லையாதலால் அந்தர்முகவிருத்தியுண்டானுலும் எவ்வளவுகாலம் விருத்தி பிரஹ்மாகாரமாகவில்லையோ அவ்வளவுகாலம் யோகி பாஹ்யபதார்த்தங்களில் தோஷபாவனையால் விருத்தியைப் பகிர்முகமாகவிடுகிறதில்லை. ஆனுல் அந்தர்முகத்தன்மையிலேயே நிறுத்துவன். இவ்விக்ஷேபரூபவிக்கினத்துக்கு விரோதியானயோகியின் பிரயத்தனத்தைக் கௌடபாதாசாரியர் சமமென்று கூறுவர்.

* சங. இராகாதி தோஷத்தினைக் கஷாயமென்பர்.

* சச. யோகிக்குச் சமாதியில் விக்ஷேபத்தாலுண்டான துக்கநிவிர்த்தியினுல் எந்த ஆநந்த முண்டாகிறதோ அதன் அநுபவம் ரஸாஸ்வாதமெனப்படும். இவற்றின் விரிவை விசாரசாகரத்திற் பார்க்க.

(இ-ன்.) *சடு சத்து *சசு சித்து *சஎ ஆனந்தம் மூன்று தான்=இருப்பு விளக்கம் பிரியமென்னும் மூன்றும் ஆன்மாவின் சொரூபவிலக்கணங்களாம், அதனுடனே = (அச்சச்சிதாநந்த விலக்கணமுடைய ஆன்மாவாகிய) பிரஹ்மத்தோடு, நாமவுருவம் = நாமமும் ரூபமுமாகியவிரண்டும், ஒத்துற்று = சம்பந்தித்து, சகமாகி=உலகமாகி. (எ-று.)

இருக்கையினிற் றோன்று திவைமூன்றும் பிரமமென
மரிக்கில்வரும் பின்னிரண்டு மரிசகமென் றுரைத்தவரோ. (சய)

(இ-ன்.) இருக்கையினில் = இருக்கின்றதனால், தோன்றுது = (ஆன்மாவாகிய பிரஹ்மம்) விளங்கமாட்டாது, இவை மூன்றும் = (சச்சிதாநந்தமாகிய) இவைகள் மூன்றும், பிரமமென=பிரஹ்மத்தின் சொரூபவிலக்கணமெனவும், பின்னிரண்டும் = பின்பு சொல்லிய நாமரூபமாகிய விரண்டும், மரிசகமென்றும்=நாசமாகத்தக்க பிரபஞ்சத்தினிலக்கணமெனவும், மரிக்கில் = சிந்தித்தால், வரும் —(உனக்கு ஆன்மவடிவப்பிரஹ்மம் விளங்கும்படி)வரும், என்று உரைத்தவரோ = என்று வுரைத்தருளிய பகவானீர்தானே. (எ-று,)

அறிந்துகொண் ஞானத்தாலே யான்மாவை யென்றுரைத்தீர்
சிறந்தொளிரு மான்மாவுந் திரிசியமா மோவெனவே. (சக)



(இ-ன்.) ஆன்மாவை = ஆத்மசொரூபத்தை, ஞானத்தாலே = உண்மை ஞானத்தால், அறிந்துகொள்ளென்றீர் = தெரிந்துகொள்வாயாகவென்று மொழிந்தருளினீர், சிறந்தொளிரும் = மிகப்பிரகாசிக்கும், ஆன்மாவும் = ஆத்மாவும், திரிசியமாமோவென=(பிரபஞ்சத்தைப்போல) விஷயமாகுமோவென்று காண்டீபன் கேட்க. (எ-று.)

ஆன்மாவுமென்ற எச்சவும்மையால் பிரபஞ்சத்தைப்போலவென விரிக்கலாயிற்று.

முந்திய ஞானத்தாலே முதிருமஞ்ஞா னந்துறக்கிற்
சிந்தையிலான் மாச்சுயமாய்த் திகழுமென்று சொன்னவரோ. ()

(இ-ள்.) முந்தியஞானத்தாலே = முதன்மையாயுள்ள தத்துவஞானத்தால், முதிரும் = அநாதியாகவிருந்துள்ள, அஞ்ஞானந் துறக்கில் = அஞ்ஞானமானது நிவிர்த்தியாகுமானல், சிந்தையில் = சித்தத்தினிடத்து, ஆன்மா = ஆத்மாவானது, சுயமாய்த்திகழுமென்று=தனக்குப் பிரகாசிக்குமென்று, சொன்னவரோ = பகர்ந்தருளிய பகவானீர்தானே. (எ-று.)

இனியமுத்திச் சுகமிருப்ப தெப்படியென் றேவினவ
வனுபவத்தி லறிவிடயா னந்தம்போ லென்றவரோ. (சங)

(அ-ள்.) இனியமுத்திச் சுகமிருப்பது = மேன்மையாகிய மோக்ஷானந்தமிருக்கிறது, எப்படியென்று வினவ=எத்தன்மையாமென்று காண்டீபன் கேட்க, விடயானந்தம்போல = விஷயசுகத்தை (யனுபவித்தரிவது) போல, அநுபவத்தில் அறி = (மோக்ஷாநந்தத்தையும்) உனது சுவானுபவத்தாலறிந்துகொள்வாயாக, என்றவரோ = என்றுபகர்ந்தருளிய பகவானீர்தானே. (எ-று.)

மனலயம்வந் தவரலது மற்றிலரோ முத்தரெனச்
சனகனைப்போற் சீவன்முத்தர் தாமுமுள ரென்றவரோ. (சச)

(இ-ள்.) மனலயம்வந்தவரலது = மனோநாசம்வரப்பெற்றவர்களே ஜீவன்முத்தர்க ளல்லாமல், மற்று முத்தர் இலரோ =

* சடு. இருக்கிறதென்று கேட்கப்படும் உணர்ச்சிக்கு விஷயமாயுள்ளது சத்தாம். அல்லது அசத்தென்று சொல்லக்கூடாதது சத்தாம். அல்லது மூன்றுகாலத்திலும் பொய்யென்று நிச்சயிக்கப்படாதது சத்தாம். அல்லது மூன்றுகாலத்திலும் வியாபித்திருப்பது சத்தாம். அல்லது எது இருக்கிறதோ அது சத்தாம். அல்லது ஒரேஅத்விதீயமாயுள்ளது சத்தாம். அல்லது சஜாதீய விஜாதீய சுவகத பேதமில்லாதது சத்தாம். சத்து, சத்தியம், உண்மை, வாஸ்தவம்என்பனஒரு பொருள.

* சசு. சுயம்பிரகாசம் சித்தாம். அல்லது எல்லாவற்றையும் பிரகாசிப்பது சித்தாம். அல்லது ஆவரணமின்றியசின்மாத்திரம் சித்தாம். அல்லது அநாதி அநந்தமாய் நிரந்தாம் விருத்தியின்றியவிடத்திருக்குஞ் சாக்ஷி சைதன்னியஞ் சித்தாம். சித்து ஞான மென்பனஒரு பொருள.

* சஎ. பரமப் (எல்லாவற்றினுமதிகப்) பிரீதிக்கு எது விஷயமோ அது ஆநந்தமாம்.

(மனோ நாசம் வறப்பெறாத) ஏனையோர் முத்தராகார்களோ, என =என்று காண்டீபன் கேட்க, சனகனைப்போல் (இராச்சியபால னுதிவியவகாரங்களைச் செய்துவந்த) சனகராசனைப்போல, சீவன் முத்தர் தாமும், (மனோலயம்வாராத பிரஹ்ம வித்துக்களாகிய) சீவன் முத்தர்களும், உளரென்றவரோ = இருக்கின்றாரென்று பகர்ந்தருளிய பகவானீர்தானே. (எ-று.)

சீவன்முத்தி யடைந்தோர்கள் செயலுமவர் தங்குணமு
நாவுரைக்கும் வாசகமு நானறியச் சொல்லுமென. (கூடு)

(இ-ள்) சீவன் முத்தியடைந்தோர்கள் செயலும்=(ஞான த்தை யடைந்து பிறப்பறுத்திருத்தலாகிய)ஜீவன் முத்தியடைந் தோர்களது செய்கைகளும், அவர் தம் குணமும்=அவர்கள் பொருந்தியுள்ள குணங்களும், நாவுரைக்கும் வாசகமும்=அவர் கள் நாவினாற் கூறுகின்ற வார்த்தைகளும், நான் அறியச் சொல்லு மென=அடியேன் தெரிந்துகொள்ளும்படியாகப் பகர்ந் தருள வேண்டுமென்று காண்டீபன் கேட்க. (எ-று)

வருங்கருவு பிறப்பினொடு வளர்தல்பருத் தல்குறைத
லொருங்கலுமெய்க் கென்றதனை யொறுத்திருப்பா ரென்றவரோ

(இ-ள்) வரும்=(கன்மத்துக்குத் தகுந்தபடி) வராநின்ற, கருவு=கருப்பமும் (மாதாவின் வயிற்றிற் றங்கியிருத்தலும்), பிறப்பினொடு=(பூமியில்)உற்பவித்தலோடு, வளர்தல் = விர்த்தி யாதலும், பருத்தல்=பெருத்தலும், குறைதல் = சிறுகலும் (சுருங்குதலும்),ஒருங்கலும்=கெடுதலும்மாய(ஆறு)விகாரங்கள், மெய்க்கென்று=உடம்பிற்கே யென்றறிந்து, அதனை=அவ்வுடம் பினை, ஒறுத்திருப்பா ரென்றவரோ=(யான் எனதென்று பற் ருது) வெறுத்திருப்பார்களென்று பகர்ந்தருளிய பகவானீர்தா னே. (எ-று.)

பார்ப்பதுவுங் கேட்பதுவும் பகர்வதுவுஞ் செல்வதுவு
மேர்ப்பதுவுங் கரணதன்ம மெனப்புகல்வா ரென்றவரோ. ()

(இ-ள்) பார்ப்பதுவும் காணுதலும், கேட்பதுவும்= கேட்டலும், பகர்வதுவும்=பேசுதலும், செல்வதுவும்=போதல் வருதலும், ஏர்ப்பதுவும் = வாங்குதல் கொடுத்தலும், கரண தன்மமென= (ஞானேந்திரிய கன்மேந்திரியங்களாகிய) கரணங் களின் தொழில்களென்று, புகல்வார் = சொல்லுவார்கள், என்ற வரோ=என்று பகர்ந்தருளிய பகவானீர்தானே. (எ-று)

பசிதாக முயிர்க்கெனவே பயந்துக்கஞ் சுகங்காமம்
வசிகோப மதிக்கெனவே மகிழ்ந்திருப்பா ரென்றவரோ. (கூஅ)

(இ-ள்.) பசி = பசித்தலும், தாகம் = நீர்வேட்கையும், உயிர்க்கெனவும்=பிராணவாயுவுக்கெனவும், பயம் = அச்சமும், துக்கம் = துன்பமும், சுகம் = இன்பமும், காமம்=இராக மும், வசிகோபம் = குற்றம் பொருந்திய சினமும், மதிக்கென =புத்திக்கெனவும், (ஆத்மாவிற்கில்லையெனவும் அறிந்து)மகிழ்ந் திருப்பார்=எப்பொழுதுங் களித்திருப்பார்கள், என்றவரோ = என்று பகர்ந்தருளிய பகவானீர்தானே. (எ-று)

வீடுந்தா ரமுமுறவு மேவியென்று மிருந்தாலு
நீடுந்தா மரையிலைநீர் நிகராவா ரென்றவரோ. (கூகூ)

(இ-ள்.) வீடும்=மனையினோடும், தாரமும் = இல்லாளோ டும், உறவும் = தன்னினத்தாரோடும், என்றும் = எப்பொழு தும், மேவியிருந்தாலும்=சம்பந்தித்திருந்தாலும், நீடும் = செ ழித்திருக்கும், தாமரை இலை நீர் நிகராவார்=பங்கயத்தளத்தின் கண் தங்கிய ஜலம்போல)பொருந்தியும் பொருந்தா)திருப்பார் கள், என்றவரோ=என்றுரைத்தருளிய பகவானீர்தானே. (எ-று)

பற்றிடுங்கா யமுந்தானும் பன்னாளொன் றாயினும்பி
னுற்றபுளி யம்பழமு மோடுமொப்பா ரென்றவரோ. (௪00)

(இ-ள்.) பற்றிடுங்காயமும்=(அஞ்ஞானகாலத்தில் யான் எனதென்று) அபிமானிக்கப்பட்டிருக்கின்ற தேகமும், தானும் =(பிரஹ்மவடிவமாகிய) ஆத்மாவும், பன்னாள் = பலகாலம், ஒன்றாயிடினும்=அபேதமாக விருந்திடினும், உற்றபின் = தத் துவ ஞானத்தை யடைந்த பின்னர், புளியம்பழமுமோடுமொப் பார் = புளியின் கனியுமதனோடும்போலப் பற்றின்றியிருப்பார் கள், என்றவரோ=என்று பகர்ந்தருளிய பகவானீர்தானே(எ-று)

கூறுமுல கியற்கையுடன் கூடினும்மெய்ஞ் ஞானம்வந்தோர்
சேறும்பிள்ளைப் பூச்சியும்போற் றிரிவார்கா ணென்றவரோ. (௧௦௧)

(இ-ள்.) மெய்ஞ்ஞானம் வந்தோர்=தத்துவஞானமுடைய மாகிய பெரியோர்கள், கூறும்=சொல்லப்படுகின்ற, உலகியற் கையுடன்=உலக வழக்கத்துடனே, கூடினும்=சேர்ந்தாலும், சேறும் பிள்ளைப்பூச்சியும்போல் = அளறும் (அதில் வாசம்பண்ணும்) பிள்ளைப்பூச்சியும்போல, திரிவார்காணென்றவரோ=(சம்மந்தியாமல்) உலாவுவார்களென்று பகர்ந்தருளிய பகவானீர்தானே. (எ-று.)

ததியூடு கடைந்தவெண்ணெய் தான்மோரிற் கிடப்பதுபோன்
மதியோடு கூடினும்பின் மயங்கார்கா ணென்றவரோ. (௧௦௨)

(இ-ள்.) ததியூடு=தயிரினிடத்து, கடைந்த வெண்ணெய் =கடைதலா லெழுந்த வெண்ணெயானது, மோரில் = மோரினிடத்தே, கிடப்பதுபோல் = (பற்றின்றிக்) கிடத்தல்போல, பின்= மெய்யுணர்வு வுதையமான பின்பு, மதியோடு கூடினும் = புத்தியோடு பொருந்தியிருப்பினும், மயங்கார்= (அப்புத்தி தத்துவம் யான் எனது என்னும்) மயக்கத்தை யடையார்கள், காண்=நீ யறிவாயாக, என்றவரோ=என்று பகர்ந்தருளிய பகவானீர்தானே. (எ-று.)

அருச்சுனன்றன் பொருட்டாக வனைவருக்கும் ஞானம்வரப்
பொருந்தியதே சிகவடிவாம் புண்ணியரோ கண்வளரீர். (௧௦௩)

(இ-ள்.) அருச்சுனன் றன்பொருட்டாக=தனஞ்சய னிமித்தமாக, அனைவருக்கும்=எல்லாமுமூட்சுக்களுக்கும், ஞானம் வர=போதமுண்டாகும்படி, பொருந்திய = இயைந்தருளிய, தேசிகவடிவாம்=ஆசிரியவடிவமாகிய, புண்ணியரோ=தரும மூர்த்தியே, கண்வளரீர்=துயின்றருள்வீராக. (எ-று.)

ஆயர்குல மாத ரளவிலோ ரைப்புணர்ந்துந்
தூயபதி னாறா யிரவருடன் றோய்ந்திருந்தும். (௧௦௪)

(இ-ள்) ஆயர்குலமாதர் = இடையர்குல மங்கையர்கள், அளவிலோரைப் புணர்ந்தும்=எண்ணிறந்தவர்களைப் புல்லியும், தூய=சுத்தமாகிய, பதினாறாயிரவருடன்=பதினாறாயிரம் இராஜ மங்கையர்களோடும், தோய்ந்திருந்தும்=கலந்திருந்தும். (எ-று)

பரம முனிவர் முன்னே பரிச்சித்தைத் தீண்டியன்று
பிரமசரி யஞ்செலுத்தும் பேரொளியே கண்வளரீர். (௧௦௫)

(இ-ள்.) பரம முனிவர் முன்னே = மேலாய தவத்தினர் முன்பாக, பரிச்சித்தைத்தீண்டி=பரிக்ஷித்திராசனைத் தொட்டு, அன்று=அந்நாளில், பிரமசரியஞ்செலுத்தும், பிரமசரியத்தினியல்பைக் காட்டிய, பேரொளியே=வியாபக சைதன்னியமே, கண்வளரீர்=துயின்றருளுவீராக. (எ-று.)

ஆதிமூ லம்விசையற் காதிமறை யின்பொருளை
யோதி யுணர்த்தியவிவ் வுண்மையினைக் காதலுற்றுக்
கற்றோருங் கேட்டோருங் காசினியில் வாழ்ந்துமுத்தி
பெற்றோர்கண் முத்தர்பெறும் பேறு. (௧௦௬)

(இ-ள்.) ஆதிமூலம்=எல்லாப் பொருள்களுக்கு முதலாயும் அபின்ன நிமித்தவுபாதான காரணமாயுமுள்ள பகவான் (தான் சர்வஞ்ஞனுக்கிருந்தும் பிரஹ்மவித்தை வருமாறு இதுவே யென்பதை யுலகிற்கு வற்புருத்தும்பொருட்டு), ஆதிமறையின் பொருளை=பழமையான உபநிடதப்பொருள்களை, ஓதி= (சாந்தீபவிருடிபாற்) கற்று, விசையற்கு = காண்டீபனுக்கு உணர்த்திய = உபதேசித்த, உண்மையினை = உண்மையையுணர்த்துவதாகிய கீதாசாரமென்னு மிந்நூலினை, காதலுற்று = வேட்கையுற்று, கற்றோரும் = படித்தவர்களும், கேட்டோரும்= குருசன்னதியிலிருந்து சிரவணம் பண்ணினவர்களும், காசினியில் வாழ்ந்து = பூமியின்கண்ணே இன்பவாழ்க்கையைப்பொருந்தி, முத்தர்=சீவன்முத்தர்கள், பெறும்பேறு=அடையும் பயனாகிய, முத்தி = விதேக கைவல்லியமாகிய மோக்ஷத்தையும், பெற்றோர்கள்=எய்தியவர்களாவர். (எ-று.)

கீதாசாரத் தாலாட்டு

முற்றிற்று.



உ

# ஸ்ரீபஞ்சதசி.

## [ பஞ்சதசப்பிரகரணம் ]

ஸ்ரீ பஞ்சதசியென்பது சதுர்வேதபாஷ்யம் சர்வதரிசனசங்கிரக முதலிய அநேககிரந்தங்களை இயற்றியவரும், சர்வஞ்ஞவித்துவச்சிரோமணியென உலகப்பிரசித்தி பெற்றவருமான ஸ்ரீ வித்தியாரண்ணியஸ்வாமிகளால் ஸ்ரீ காயத்திரிதேவியின் வரத்தால் அருளிச்செய்யப்பட்டது. இதற்குத் தஞ்சைமாநகரம் ஸ்ரீமான் வே. துப்புஸ்வாமிராஜு அவர்கள், சிறிது சம்ஸ்கிருதமும் தமிழும் உணர்ந்தவர்களும் தமிழ்மாத்திர முணர்ந்தவர்களுமாகிய இருதிற முமுக்ஷுக்களுக்கும் உபயோகப்படுமாறு அந்நூலிற்கு மூலசுலோகங்களின்பேரில் அந்வயமும், ஓர் பொழிப்புரையும், ஸ்ரீ வித்தியாரணியசுவாமிகளின் சிஷ்யரான ஸ்ரீ ராமகிருஷ்ணபண்டிதர் அவர்களது சம்ஸ்கிருதவியாக்கியானத்திற்குச் சரியான மொழிப்பெயர்ப்புவடிவ உரையும், அவ் வுரைகளுக்கு அங்கங்கே வேண்டியவிடத்துப் பிரஹ்ம நிஷ்டபண்டித ஸ்ரீ பீதாம்பரஜீ அவர்களால் செய்யப்பட்ட டிப்பணியையும் மற்றும் பலவுரையாசிரியர்கள் கருத்துக்களையும் அனுசரித்த ஓர் விளக்க வுரையும், எழுதப்பட்டுள்ளது. இவ்வுரையில் மூலசுலோகம் சம்ஸ்கிருத வியாக்கியானம் இரண்டிலுமுள்ள விஷயங்களினும் வெகு மடங்கதிகமாகத் தெரியத்தக்க விஷயங்களிருப்பதோடு ஆங்காங்கு உதாரணமாகக் காட்டப்பட்ட சம்ஸ்கிருத சுருதி சூத்திரம் சுலோகமுதலியவற்றிற்குத் தமிழுரையும் எழுதப்பட்டுளது.

இத்தமிழ்ப் பஞ்சதசியை வாசிப்பவர்கள் மற்ற எந்த நூலின் உதவியுமில்லாமலே அத்வைதவுண்மையினையும் அதன் சகல சாதனங்களையும் செவ்வையாய்த் தெரிவதனோடு பிறவாதிகளாற் கலங்காதிருந்து தாம் பிறர் சம்சயங்களை யொழிப்பதிற் சமர்த்தருமாவர் என்பதற்கைய மில்லை.

இவ்வரிய பெரிய வரப்பிரசாத நூலை நல்ல காகிதத்தில் சுத்தமாய்ப் பதிப்பித்து மனோரம்மியமான வர்ணமைமுதலியவற்றாலாகிய நேர்த்தியான சித்திரகோசமொன் றமைத்து, ஸ்ரீ ஆதிசங்கராசாரியரவர்கள் உருவமைந்த புகைப்படத்துடன், இவ்வுரையாசிரியராசிரியர் புகைப்படமும், உரையாசிரியர் புகைப்படமும் வைத்து இராயல் 50 பவுண்டு பேப்பரில் ராயல் 8 பக்க அளவுள்ள 1452-பக்கங்களுள்ள 2 புத்தகங்களாக்கி வெளிப்படுத்தி யிருக்கின்றோம்.

இதன் விலை ரூ. 10—0—0. தபாற்கூலி 0—15—0.

சாது ஸ்ரீ நிச்சலதாஸரியற்றிய

## ஸ்ரீ விருத்திப்பிரபாகரம்,

ஓர் அருமையான நூல்.

இந்நூலில் ஷட்சாஸ்திர முணர்ந்தவரும் அற்புத பிரஹ்மநிஷ்டரு மாகிய மஹாத்மா ஸ்ரீ நிச்சலதாஸரவர்கள் ஜீவர்கள்பேரில் கருணைகூர்ந்து வியாகரணம் நியாயம் வைசேஷிகம் மீமாம்ஸை வேதாந்தமுதலிய பல நூல்களை நுண்ணிய அறிவோடு பலகாலும் பயின் றுணர்தற்கரிய சித்தாந் தங்களை மந்தரும் எளிதிலுணருமாறு உள்ளங்கை நெல்லிக்கனிபோற் காட்டியிருக்கின்றனர். இவ்வரியநூலில் பிரமாணங்கள் ஆறும், அவற்றில் மதவாதிகளின் அபிப்பிராயம் சித்தாந்தக்கொள்கைமுதலியனவும், அத்தியாச லக்ஷணங்களும், அவற்றின் மதபேத சித்தாந்த முதலியனவும், வேதாந்த சித்தாந்தத்தின் பல நூலாசிரியர் அபிப்பிராயமும், அவற்றிற்கு ஒரே அத்விதீயப்பிரஹ்மத்தில் தாற்பரியமுண்மையும் விஸ்தாரமாய்ச் சொல்லப்படுகின்றன. இந்நூலையும் இதற்கு முன் இந்நூலாசிரியாற் செய் யப்பட்ட விசாரசாகரநூலையும் கற்போர், நியாய வைசேஷிக சித்தாந்தங்க ளையும் சூத்திரம் பாஷியம் அவற்றின் வியாக்யானங்கள் என்பனமுதலாக இற்றைவரையுமுள்ள எல்லா அத்வைத நூல்களையும் நன் குணர்ந்தவராவர். இத்தகைய பெருமை பொருந்திய நூல் ஹிந்திபாஷையி லிருத்தல்பற்றி அது தமிழ்நாட்டாருக் குபயோகமாகும்பொருட்டுத் தஞ்சைமாநகரம் ஸ்ரீமத் வே. துப்புஸ்வாமிராஜு அவர்களால் தமிழில் மொழிபெயர்க்கப் பட்டது. இதன் விலை ரூ 4.

## ஹடயோகப்பிரதீபிகை.

(யோகநூல்)

இது ஸ்ரீ கோரக்கர்சிடர் சுவாத்துமாராமயோகீந்திரராற் செய்யப் பட்ட ஸம்ஸ்கிருதமூலமும் அதற்குத் தஞ்சை ஸ்ரீமத் வே. துப்புஸ்வாமி ராஜு அவர்களாற் செய்யப்பட்ட தத்துவப்பிரகாசிகை யென்னும் தமி ழுரையும் சேர்த்து அச்சிடப்பட்டிருக்கின்றது. ஹட, லய, ராஜயோக மென்னும் மூவகை யோகங்களை (இயமநியமாதிகள், அநேக ஆசனாதிகள் சூரியபேதனாதி கும்பகங்கள், தௌதியாதிக் கிரியைகள், பிராணாயாம பேதங்கள், மகாமுத்திராமுதலிய பத்து முத்திரைகள், சமாதிக் கிரமங் கள், சாம்பவியாதி சின்முத்திரைகள், நாதானுசந்தானம், பிரத்தியாகார தாரண தியான சமாதி லக்ஷணங்கள் முதலிய பல விஷயங்களையும் விரி வாய்க் கூறு மிந்நூலைப் பார்த்தவர்கள் வேறு யோகநூல் பார்க்கவேண்டிய தில்லை யென்பது இந்நூலைப் பார்ப்பதினாலேயே விளங்கும்.

இதன் விலை ரூ. 1—8—0.



## ஸ்ரீவிசாரசந்திரோதயம்,

[வேதாந்த நூல்]

(இரண்டாம்பதிப்பு)

ஹிந்திபாஷையில் பிரஹ்மநிஷ்ட பண்டித ஸ்ரீ பீதாம்பரஜீ அவர்க ளால் செய்யப்பட்ட இந்நூல் மிகச்சிறிதும் மேன்மையுடையதும், கடின மில்லாததும், விரிந்த வேதாந்தவிஷயங்களுள்ளதும், உத்தம அதிகாரி களுக்கு மிக்க உபயோகமுள்ளதுமாம். இத்தகைய ஓர் நூல் தமிழிலும் இருத்தல்வேண்டு மென்று இதனைத் தஞ்சை ஸ்ரீமத் வெ. துப்புஸ்வாமிரா ஜு அவர்கள் மொழிபெயர்த் தச்சிட்டனர். இந்நூலிற்கு ஆங்காங்கு டிப்ப ணியென்னும் விளக்கவுரையும் எழுதப்பட்டுளது. இவ்விரண்டாம் பதிப்பில் அதிலுள்ள ஒவ்வொருவிஷயத்தினுக்கும் 108உபநிஷதங்களாகிய சுருதிகளி னின்றும் வாக்கியங்களைத் தமிழில் மொழிபெயர்ப்புடன் பிரமாணம் காட்டியிருப்பதோடு அநேக விஷயங்களில்முன் பதிப்பைவிட விளக்கியும் கூட்டியும் அத்தியாசங்கட்குத் தக்க உதாரணங்கள் கொடுக்கப்பட்டுமிருப்ப தோடு ஒவ்வொரு கலையின் ஆரம்பத்திலும் அக்கலையின் பொருளடங்கிய சூத்திரங்கள் மனனஞ்செய்தற்கேதுவாக அடைக்கப்பட்டுள்ளன. இந் நூலிற் பழகுவோர்களுக்கு மற்றப் பெரிய நூல்களை விசாரிப்பதில் மிக்க திறமை யுண்டாகும். வேதாந்தத்தை அப்பியசிக்க ஆரம்பிப்பவர்களுக்கு இந்நூலைப்போ லுபகாரமுடையது வேறில்லை. பெரும்பாலும் மந்தமதி யுள்ளாரு முணருமாறு எளிய நடையிற் செய்யப்பட்டுளது. வேதாந்த நூலைப் பயில விரும்புவோர் ஒவ்வொருவருக்கும் இஃது இன்றியமையாத தென்பது இந்நூலைப் படிப்பதனால் விளங்கும். இதன் விலை ரூ 1—4—0

## ஸ்ரீ விசாரசாகரம்,

(இரண்டாம்பதிப்பு)

இந்நூல் ஹிந்திபாஷையில் மகாத்மா சாது ஸ்ரீ நிச்சலதாஸர் அவர் களாற் எழுதரங்கங்களாக இயற்றப்பட்டது. இதில் வேதாந்தவிஷயங் கள் முழுவதும் அநுபவாநுசாரமாயும் மிக விஸ்தாரமாயும் எளிதாய் அறிய த்தக்கனவாயும் அமைக்கப்பட்டிருக்கின்றன. இந்நூலின் விஷயம் முன் மகா-ா-ா-ஸ்ரீ சிவராயர் அவர்களால் மொழிபெயர்க்கப்பட்டுப் பிரசுரமான முதல் பதிப்பினால் யாவருக்கும் தெரிந்திருக்கும். இப்போது பம்பாயில் வெளிப்பட்ட ஹிந்தி நாலாவது பதிப்பின்படி தமிழில் இரண்டாவது பதிப்பு மிகச்சுத்தமாய்ப் பதிப்பிக்கப்பட்டுளது இதன் விலை ரூ 3—0—0.

## பிரஹ்மவித்யாசீர்வாதபத்ததி.

இது சதுர்வேதபாஷ்ய கர்த்தாவாகிய ஸ்ரீ வித்தியாரணியஸ்வாமிகளால் இயற்றப்பட்ட வசனரூபமான சம்ஸ்கிருத வேதாந்தநூல். இதில் வேதாந்தத்தின் இரகசியங்கள் முழுவதும் வெகுசுருக்கமாகச் சொல்லப்பட்டுளது. இது மனனஞ்செய்வோருக்கு அத்தியந்த உபயோகமுள்ளதென வுணர்ந்து இதற்கு தஞ்சைமாநகரம் ஸ்ரீமான், வே. துப்புஸ்வாமிராஜு, அவர்களியற்றிய தமிழ்மொழி பெயர்ப்புடன் வெளியிடப்பட்டது; இது இத்தேசத்து நாளதுவரையில் வெளிவாராதது.

மிகநயமானது இதன் விலை அணா 1

---

## தருக்ககௌமுதி,

நியாயபதார்த்தம் பதினாறுடன்

[தர்க்கநூல்.]

(இரண்டாம்பதிப்பு.)

இந்நூல் தருக்கநூல்பயில முயல்வோர்க்கு எளிதும், சிறிதும், தருக்க சங்கிரகம் அன்னம்பட்டீயம் முதலியவற்றிலுள்ள விடயங்களினும் மிகுந்த விடயங்களுள்ளதுமாயிருத்தலின், இதனைத் தஞ்சை ஸ்ரீ வே. துப்புஸ்வாமிராஜு அவர்கள் சம்ஸ்கிருதத்தினின்றும் தமிழில் மொழிபெயர்த்தச்சியற்றினர். இப்பதிப்பில் நியாயபதார்த்தம் 16-ம் செவ்வையாய்ச் சுருக்கக் கூறியிருப்பதுடன் தக்க குறிப்புரை ஒன்றும் எழுதப்பட்டுள்ளது. இது பதார்த்தசோதனை புரிவோர்க்கு இன்றியமையாததே. இதன் விலை அணா 6

---

## தத்துவமஸி மகாவாக்கியவுபதேசம்,

சுகரஹஸ்யோபநிஷத நான்குமகாவாக்கியார்த்தத்துடன்

[உபநிஷத்.]

(இரண்டாம்பதிப்பு.)

இது நூற்றெட்டு உபநிஷத்துக்களுள் பிரதானமான நான்கு மகா வாக்கியங்களைக் கூறும் நான்கு உபநிடதங்களில் ஒன்றாகிய சாந்தோக்கிய உபநிடதத்தின் 6-வது பிரபாடகத்தில் சுவேதகேது என்னும் புத்திரனுக்கு அவர் பிதாவாகிய உத்தாலகர் ஒன்பது முறை கூறிய உபதேசமாம். இது சம்ஸ்கிருத உணர்ச்சியில்லாதவர்களும், வேதாதிகாரமில்லாதவர்களுமாகிய இருதிறத்தாருக்கும் உபயோகமாமாறு தஞ்சை ஸ்ரீ வே. துப்புஸ்வாமிராஜு அவர்களால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது. இது வேதாந்த வுண்மையை எளிதிலுணர்த்தும் ஓர் அரிய சிறு நூல். இதன் விலை அணா 2.



## ஸ்ரீ பாலபோதம்;

(வேதாந்தநூல்)

ஹிந்தி பாஷையில் பிரஹ்மநிஷ்டபண்டித ஸ்ரீ பீதாம்பரஜீ அவர்களால் குருசிஷ்ய சம்வாதமாகச்செய்யப்பட்ட இந்நூலில் மிகச்சூக்ஷ்மமான வேதாந்த விஷயங்களும் பதார்த்தங்களின் லக்ஷணங்களும் மிகத்தெளிவாய் விஸ்தாரமாய் எழுதப்பட்டிருக்கின்றன. இந்நூலில் வெகு சந்தேகங்கள் ஒழியும். ஸ்ரீவிசாரசந்திரோதய மென்னும் நூலின்பின் படிக்கத்தக்கதாயும் மேல் ஸ்ரீவிசாரசாகரம் ஸ்ரீவிருத்திப்பிரபாகர முதலிய அரிய நூல்களைக் கற்பதற்கு மிக்க உபயோகமானதாயு முள்ளது. இது மந்தமதியினரும் எளிதில் அறியுமாறு தஞ்சை ஸ்ரீ வே. துப்புஸ்வாமிராஜு அவர்களால் மொழிபெயர்க்கப்பட்டு ஷை மொழிபெயர்ப்பாசிரியர் படத்துடன் அச்சிடப்பட்டிருக்கிறது. இதன் விலை ரூ 1-0-0.

---

## ஸ்ரீ விருத்திரத்நாவலி

(வேதாந்தநூல்)

இது ஸ்ரீ விருத்திப்பிரபாகரம் மிக விஸ்தாரமாயும் கடினமாயு மிருத்தல்பற்றி, அதனைப் படிக்கத் திறனில்லாதவர்களுக்கு அவ்விஷயங்கள் தெரியுமாறு ஸ்ரீ பீதாம்பரஜீ அவர்களால் ஹிந்திபாஷையில் சங்கிரகமாய்ச் செய்யப்பட்டது. தமிழிலும் ஸ்ரீ விருத்திப்பிரபாகரம் மொழி பெயர்க்கப்பட்டிருத்தல்பற்றி இதுவும் தமிழிலிருந்தால் யாவர்க்கும் உபயோகமாமென்று ஸ்ரீமான் வே. துப்புஸ்வாமிராஜு அவர்களால் மொழிபெயர்க்கப்பட்டு மொழிபெயர்ப்பாசிரியர் படத்துடன் அச்சிடப்பட்டிருக்கிறது.

இதன் விலை அணா 12.

---

சங்கரகிரந்தாவலி (முதற் புத்தகம்)

## அபரோக்ஷாநுபூதி (வேதாந்தம்)

(இரண்டாம் பதிப்பு.)

இது ஸ்ரீசங்கராசாரியசுவாமிகளாலியற்றப்பட்டது. பரம ஆஸ்திக உத்தம அதிகாரிகளுக்கு இலேசாய் அநுபவமாத்திரத்தை யுணர்த்தும் நூல். இது சம்ஸ்கிருத சுலோகங்களுக்குத் தமிழில் ஸ்ரீ வித்தியாரண்யஸ்வாமிகள் வியாக்கியானத்தை யநுசரித்து ஸ்ரீமான் வே. துப்புஸ்வாமிராஜு அவர்களியற்றிய சிறந்த வுரையுடன் வெளிப்படுத்தப்பட்டது. இதன் விலை அணா 6

## சங்கரகிரந்தாவலி (இரண்டாம் புத்தகம்)

## ஆத்மபோதமும், தத்துவபோதமும்.

இவ்விரண்டும் ஸ்ரீசங்கராசாரியஸ்வாமிகளால் இயற்றப்பட்டன. இவற்றுள் ஆத்மபோதமானது மந்தமதியினரும் எளிதிலுணருமாறு எளிதான சுலோகவடிவமாய்ச் செய்யப்பட்டுளது. இதில் ஒவ்வொரு சுலோகமும் ஒழிவிலொடுக்க நூல்போல ஒவ்வொரு திருஷ்டாந்த வாயிலாக விஷயத்தினை நிரூபிக்கின்றது. இதனையும் அறிய சக்தியில்லாத முமுக்ஷுக்களின் பேரில் கருணைகூர்ந்து ஸ்ரீமத் ஆசாரியமூர்த்திகள் சம்ஸ்கிருதவசனவடிவான தத்துவபோதநூலினை யியற்றியருளினர். இதில் தத்வஞானத்திற்கு அத்தியாவசியகமான வேதாந்தப் பிரக்கிரியைகள் எளிதாய் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. இவற்றுள் முதலாவதற்கு ஸ்ரீமான் வே. துப்புஸ்வாமிராஜு அவர்கள் சுலோகத்திற்கு அந்வயமும் பொழிப்புரையும் ஸ்ரீபஞ்சதசியின் வியாக்கியான கர்த்தாவாகிய ஸ்ரீராமகிருஷ்ண பண்டிதரவர்களியற்றிய வியாக்கியானத்திற் கிணங்க ஓர் தமிழுரையும் குறிப்புரையும் செய்திருக்கின்றனர். இரண்டாவதற்கும் அவர்கள் ஓர் தமிழுரையும் செய்திருக்கின்றார்கள். இவ்விரண்டு மூலங்களையும் தமிழுரைகளையும்சேர்த்து சங்கரகிரந்தாவலி உ-ம் புத்தகமாக வெளியிட்டிருக்கிறோம்.

இதன் விலை அணா 5

மற்றும் அநேக புத்தகங்கள் இச்சங்கரகிரந்தாவலி யென்னும் பெயரால் சீக்கிரத்தில் வெளியிடப்படும்.

---

## கீதைக்கோத்து (முதற்புத்தகம்.)

## உத்திரகீதை.

இது ஸ்ரீ பகவானால் அர்ச்சுனனுக் குபதேசிக்கப்பட்ட சம்ஸ்கிருத மூலமும் அதற்கு ஸ்ரீகௌடபாதாசாரியாராற் செய்யப்பட்ட சம்ஸ்கிருத வியாக்கியானத்தை யநுசரித்து தஞ்சை ஸ்ரீ வே. துப்புஸ்வாமிராஜு அவர்களால் செய்யப்பட்ட தமிழுரையும் சேர்த்து அச்சிடப்பட்டது. இது சுத்தமாய் சுலோகங்களும் மேற்கோள்களும் தேவநாகரி எழுத்துக்களால் அமைக்கப்பட்டு மிகநேர்த்தியாய் புதுமாதிரியாய் அச்சிடப்பட்டுளது.

இதன் விலை அணா 4.



## கீதைக்கோத்து (இரண்டாம் புத்தகம்.)

## ஸ்ரீ ராமகீதை.

ஸ்ரீ வேதவியாஸமுனிவரால் அருளிச்செய்யப்பட்ட அத்தியாத்மராமாயணத்தின் உத்தரகாண்டத்து 5-வது சர்க்கத்துள்ளது. இது வேதாந்தப்பிரக்கிரியைகளை யுக்தியோடு நிரூபிக்கும் அத்வைதப் பிரௌடிகிரந்தம் இது ஆஸ்திகர்களுக்கு அத்தியந்தமுபயோகமுள்ளதெனக் கருதி இதன் சம்ஸ்கிருத வியாக்கியானத்திற்கிணங்க தஞ்சைநாகரம் ஸ்ரீமான் வே. துப்புஸ்வாமிராஜு அவர்களால் இயற்றப்பட்ட ஓர் விரிந்த தமிழுரை குறிப்புரைகளுடன் வெளியிடப்பட்டது. இதுவே பிராசீனமான இராமகீதை. இதனின் வேறாக அச்சிடப்பட்டிருக்கும் இராமகீதை நவீனமெனத்தெரிகிறது. இதன் விலை அணா 3

---

## கீதைக்கோத்து (மூன்றாம் புத்தகம்)

## குருகீதை.

இது பதினெண்புராணங்களுள் ஒன்றாகிய ஸ்கந்தபுராணத்தின் உத்தரகண்டத்து உமாமகேசுவர சம்வாதத்தில் உள்ளது. குருபக்தியில்லாதவனுக்கு எவ்வித்தையும் பிரகாசிக்காதாகலின் எவ்வித்தியாப்பியாசிகளுக்கும் இன்றியமையாதது. இதில் குருவின் இலக்ஷணமும், மாகாத்மியமும், குருவை யாராதனஞ்செய்யும் முறைகளும் அதன்பயனும், அப்படிச்செய்யாததினால் வரும் தீங்குகளும் மற்றும் குருபக்திக்கேதுவான அநேக காரியங்களும் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. இது நாளதுவரையில் நமது பரதகண்டத்தில் பிழையின்றி யச்சிடப்படாமையால் தஞ்சைஅரண்மனை ஸரஸ்வதிமாலிலும் மற்றும் பலவிடத்திலுமிருந்த கையெழுத்துப்பிரதிகளையும் அச்சுப் பிரதிகளையும் கொண்டு பிழையறப் பரிசோதித்து, அப்பரிசோதிக்கப்பட்ட பாடத்திற்கிணங்கதஞ்சைஸ்ரீமான்வே.துப்புஸ்வாமிராஜு அவர்களா லியற்றப்பட்ட தமிழுரை குறிப்புரைகளுடன் அச்சிடப்பட்டு வருகிறது.

மற்றும் அநேககீதைகள் இக்கீதைக் கொத்தின் வாயிலாக சீக்கிரத்தில் வெளிவரும்.

---

## விவேகசிந்தாமணி

## (வேதாந்தபரிச்சேதம்)

இது கன்னடபாஷையில் ஸ்ரீமத் நிஜகுணயோகீசுவரராலியற்றப்பட்டது. இதில் வேதாந்தப்பிரக்கிரியைகள் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டி

ருக்கின்றன. இது வே. ஸ்ரீமத் சிவப்பிரகாச சுவாமிகளால் வேதாந்த
சூடாமணி மென்னும் பெயரால் தமிழில் பெயர்க்கப்பட்டது. ஆனால்
அதில் கன்னடத்துள்ளபடி சம்பூர்ணப்பிரக்கிரியையு மில்லாமையினாலும்,
அதன் பாடங்கள் மாறுபட்டிருப்பதோடு அதற்கோர் சரியான உரை ஏற்
படாமையினாலும், முன்னேற்பட்ட வசனங்களெல்லாம் வெகு பிழைவாயி
ருந்ததாலும், முழுவதுமின்மையாலும் அவை பெரும்பாலும் அநேகருக்
குபயோகப்படாமை கண்டு தஞ்சைமாநகரம் ஸ்ரீமான் வே. தப்புஸ்வாமி
ராஜு அவர்கள் இதனை கன்னடத்திற்கு நேராக மொழிபெயர்த்தார்கள்.
இது எல்லோரும் வேதாந்தத்தின் சகல விஷயங்களையும் எளிதாயறிந்து
கொள்ளுதவற்கேதுவா யிருத்தல்பற்றி வெளியிடப்பட்டது.

இதன் விலை அணா 6

## சித்தாந்தபிந்து.

இது ஸ்ரீசங்கரபகவத் பாதாசாரியசுவாமிகள் அருளிச்செய்த தசசு
லோகியின் வியாக்கியானம். இவ்வியாக்கியானம் செய்தவர் ஆரியபாஷையில்
மகாக்கியாதிபெற்ற மதுசூதன சரஸ்வதி சுவாமிகள். இப்புஸ்தகம் ஆத்மா
இன்னது அநாத்மா இன்னது என்பது பற்றிச் சுருதியாதிப் பிரமாணங்
களுடன் யுக்திசகிதமாக நன்கு விளக்கிக் கூறுகின்றமையின், வேதாந்த
சாஸ்திரத்திற்கு ஓர் திறவுகோல் போல்வதாம். இதில் அறியவேண்டிய
விஷயங்களெல்லாம் சுருக்கமாகவும் விளக்கமாகவும் பண்டிதர்முதல் பாமா
ரருள்ள யாவரும் நன்குணருமாறு விளக்கப்பட்டிருக்கின்றன. இப்புஸ்
தகம் ஒவ்வொருவர் கையிலும் அத்தியாவசியகமா யிருக்கத்தக்க தென்பது
அதனது விஷயஅட்டவணையைப் பார்க்க நன்கு விளங்கும்.

காலிக்கோ விலை அணா 10. ராப்பர் விலை அணா 8.

## வேதாந்தபரிபாஷை.

இது வேதாந்த வித்வத் சிரோமணி யென்று மிகப் பிரசித்தி பெற்
றுள்ள தர்மராஜ தீட்சிதரா லியற்றப்பட்டுள்ளது. இஃதெட்டுப் பரிச்சேத
முடையது. இதனால் வேதாந்தத்திற் குரிய பிரமாணங்க ளிவ்வளவென்
பதும், அவற்றின் பயனும் வேறு அனுபவரகசியங்களும் தெளிவா யறி
ந்துகொள்ளத்தக்கனவாம்.

காலிக்கோ விலை அணா 12. ராபர் விலை அணா 10.

## தோடக மென்னும்
## வேதசார சமுத்தரணம்.

ஸ்ரீசங்கராசார்ய பகவத்பாதாசாரிய சுவாமிகளின் முக்கிய சீடரு
ளொருவராகிய ஆனந்தகிரி யென்னும் ஸ்ரீதோடகாசிரியரவர்கள் தமது



குருபரன் திருவருளால் பாதங்கடோறும் நான்கு சகணங்கள் அமைந்த
தோடகசந்தத்தால் மறைமுடி வியாவையுந் தொகுத்துச் சுருதிசார சமுத்
தரணம் என்னு மிந்நூலை வடமொழியிற் திருவாய்மலர்ந்தருளினர். அரு
மையும் அருளும்வாய்ந்த விந்நூல் தேவவாணி யுணர்ந்தார்க்கே யன்றித்
தமிழ் மக்களுக்குப் பயன்படா திருப்பது கருதி ஸ்ரீ கோவிலூர் மடாதி
பதியா யெழுந்தருளியிருக்கும் ஸ்ரீமத் வீரசேகரஞானதேசிகர் பாதசேகர
ராகிய ஸ்ரீசுப்பையசுவாமிக ளவர்களால் தமிழில் செய்யுள் வடிவமாக
மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. விலை அணா 4.

## சிவமஹிம்நஸ்தோத்திரம்

இது கந்தர்வர்கட் கிறைவராகிய ஸ்ரீ புட்பதந்தாசிரியரவர்களால்
ஸ்ரீமகாதேவரது அனந்தகல்யாண குணங்களைத்தொகுத்து முப்பத்திரண்டு
சுலோகவடிவமாகத் திருவாய்மலர்ந்தருளப்பட்டது.

இதற்கு ஸ்ரீ அத்வைதசித்யாதி கிரந்தகர்த்தரும் சர்வஞ்ஞ சூடா
மணியுமாகிய ஸ்ரீமதுசூதனசரஸ்வதிசுவாமிக ளவர்களால் மிகவு மழகிய
வோர் வியாக்கியானஞ் செய்யப்பட்டிருக்கின்றது; பூர்வாசிரியர்களு மிந்
நூற்குப் பாஷியமியற்றி யிருக்கின்றனர். அகோபலி யென்ப் பெரிய
அரும்பெரும் வியாக்கியானமும், சுபோதினியென்னும் சிறியவியாக்கியா
னமும் இன்னும் பலவியாக்கியானங்களு மிந்நூற்குள. இத்தகைய அருமை
வாய்ந்த விந்நூல் தேவ வாணியிலிருப்பதால் அவ்வும்பர்வாணி யுணர்ந்தார்க்
கன்றித் தமிழ்மக்கட்குப் பயன்பாடாமையை யுணர்ந்து அன்னோரு முணரு
மாறு ஷெ கோவிலூர் மடாலயம் ஸ்ரீ சுப்பையசுவாமிக ளவர்களால் தமி
ழில் செய்யுள்வடிவமாக மொழிபெயர்க்கப்பட்டது. விலை அணா 1.

## ரிபுகீதைத்திரட்டு (குறிப்புரையுடன்).

மகா இதிகாசங்களுளொன்றாகிய சிவரகசியத்தில் ஆறாவது அம்சத்தி
லுள்ள ரிபுகீதை வடமொழி வல்லார்க்கேயன்றித் தமிழருக்கு உபயோக
மாகா திருத்தலை நோக்கித் திருவிடைமருதூர்ப் பிட்சுசாஸ்திரிகளென்று
வழங்கும் உலகநாதசுவாமிகளவர்களால் 1914 பாடலாகத் தமிழில்மொழி
பெயர்த்தருளப்பட்டது. அது தமிழ்மக்க ளியாவருக்கும் பெரிதும் உப
யோகமாகும்படி விஷயப்பொருத்தம் விடாது 874 பாடலாகத் திரட்டப்
பட்டு அவசியமானவிடங்களிற் குறிப்புரை எழுதப்பட்டு உயர்ந்த கிளேஸ்
கடிதத்தில் சுத்தப்பிரதியாக அச்சிடப்பட்டிருக்கின்றது. இது முமுட்சுக்க
ளொவ்வொருவராலும் அத்தியாவசியகமாய் விரும்பத்தக்க தென்பது மிகு
பிரசித்தம். காலிக்கோ பைண்ட் விலை ரூபாய் 1.

ரிபுகீதை 1914 பாடல்களும் அடங்கியது ரூ. 2—8—0.

2

## விவேகசூடாமணி.

சுத்தபாடம், பாக்கேட்சைஸ். விலை அணா 8.

ஸ்ரீசங்கரபூஜ்ய பகவத்பாதாசாரிய சுவாமிகளவர்களால் திருவாய் மலர்ந்தருளப்பட்டது. இந்நூல் தமிழ் மக்கட்குப் பெரிதும் பயன்படுமாறு திருவிடைமருதூர் பிட்சுசாஸ்திரிகளென்னும் உலகநாதசுவாமிகளவர்களால் 674 பாடலாக மொழிபெயர்த்தருளப்பட்டது. இதில் 164அரிய பெரிய விஷயங்களடங்கியிருக்கின்றன. இது முமுட்சுக்களொவ்வொருவராலும் பொன்னேபோல் போற்றப்படுவது; ஆத்மானாத்ம விவேகமடைவதற்குப் பரம சாதனமாயுள்ளதென்பதிதன் மகுடத்தாலேயே நன்கு விளங்கும்.

---

## நவநீதசாரம் (வினாவிடை.)

இது வாசிட்டமுதலிய நூல்களின் கருத்துக்களைச் செவ்வனே விளக்குவது. இப்புத்தகம் படிப்பதால் வாசிட்டமுதலிய அரியபெரிய நூல்களின் இரகசியங்களை யெல்லாம் எளிதில் அறிந்து கொள்ளலாம். 158 பக்கங் கொண்ட புதிய பதிப்பு. காலிக்கோ பைண்டு விலை அணா 8.

---

## தர்க்கபரிபாஷை (விரிவான குறிப்புரையுடன்)

சர்வ வித்தைக்குந் தீபமாயும், சகல தர்மங்கட்கு முபாயமாயும், சகல தர்மங்கட்கு மாசிரமாயுமுள்ள தர்க்கசாஸ்திரம் சம்ஸ்கிருதத்திற் பிரபலமாயிருப்பதுபோல் தமிழிலிராமையின் அக்குறை நிவர்த்தித்தற் பொருட்டுத் துறைமங்கலம்—சிவப்பிரகாச சுவாமிகளால் மொழிபெயர்க்கப்பட்ட தர்க்கபரிபாஷை சட்தரிசனங்களுளொன்றாகிய நியாய சாஸ்திரத்தை யநுசரித்துப் பிரமாணமுதல் நிக்கிரகஸ்தான மீறாகிய சோடச (பதினாறு) பதார்த்தங்களைச் சங்கிரகமாக நிரூபிப்பதா யிருத்தலின், அது பிரஹ்மஸ்ரீ. விஷ்ணுபுரம் இராமச்சந்திரசாஸ்திரியாரவர்கள் முன்னிலையிற் பரிசோதித்துச் செப்பஞ் செய்யப்பட்டுத் தர்க்காபியாசஞ் செய்யும் யாவருக்கும் பிரமாணமுதலியவற்றின் பதார்த்தஞானம் எளிதி னுண்டாகுமாறு அவசியம் வேண்டுமிடங்களில் விரிவாகக் குறிப்புரை யெழுதப்பட்டுளது. விலை ரூபாய் 1.

---

## அறிவாநந்தசித்தியார்.

சுத்தபாடம். விலை அணா 4.

இந்நூல் வலங்கை மீகாமனா ரென்னும் பெயரா லருளிச்செய்யப்பட்டது. இதில் 183 அரிய பெரிய விஷயங்களடங்கிய 326 செய்யுட்களிருக்கின்றன. இதனால் நல்லாசிரியரிடத்துப் பலவருடங் காத்திருந் தறியத்தக்க விஷயங்கள் பலவும் தெளிவாயறிந்து கொள்ளலாம். இது முமுட்சுக்களுக்குப் பரமசாதனமா யுள்ளதென்பது இதன் பெயராலேயே நன்கு விளங்கும். இது தற்காலங் கிடைத்தற் கருமையாயிருக்கின்றதை பற்றிப் பலவேட்டுப் பிரதிகளைக்கொண்டு பரிசோதித்துச் சுத்தமாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.



---

## பாட்டியற்கொத்து

(உரையுடன்).

இதில் வச்சணந்திமாலை, சிதம்பரபாட்டியலின் பொருத்தவியல் மரபியல் நவநீதப்பாட்டியல், சம்மந்தப்பாட்டியல்அடங்கியிருக்கின்றன. இது நூலின் முன்மொழி இலக்கணமும் பிரபந்த விலக்கணமும் ஆராய்வார்க்குப் பெருங்கருவியா யிருப்பதாம். விலை அணா 6

---

## வாக்கியசுதை யென்னுந் திருக்குத்திருசிய விவேகம்.

மூலமும் உரையும். (மொழிபெயர்ப்பு).

இஃது அநேக வேதாந்த சாஸ்திரங்களின் ஆசிரியரும், சங்கரபீடத்தாசிரியரா யெழுந்தருளி யிருந்தவருமாய் ஸ்ரீ வித்தியாரண்ணிய சுவாமிகளாலருளிச் செய்யப்பட்டது. வேதாந்தசாஸ்திரங்களின் முக்கிய அபிப்பிராயத்தை மிகவும் சுருக்கமாகவும்தெளிவாகவும் விளக்கியிருப்பதுபற்றி இது முமுட்சுக்களொவ்வொருவராலும் பொன்னேபோற் போற்றப்படுவது. சமாதிபுரிய விருப்புள்ள ஒவ்வொருவருக்கும் இன்றியமையாததா யுள்ள இந்நூல் சுத்தப்பதிப்பாக அச்சிடப்பட்டிருக்கின்றது. விலை அணா 2.

---

## வேதாந்தசாரம்.

சமஸ்கிருத மொழிபெயர்ப்பு-வசனம்.

இது யாவருக்கும் விளங்கக்கூடிய எளிய செந்தமிழ் நடையில் வினாவிடையாக வசனரூபமாயுள்ளது. இவ்வரிய பெரியநூல் இதுகாறும் சுத்தபாடமாக வாராதது நோக்கி நன்கு ஆராய்ச்சி செய்தச்சிடப்பட்டுள்ளது. வேதாந்தசாஸ்திரத்தின் முக்கியமான இரகசியங்களை யெல்லாம் எளிதிலறிந்து கொள்வதற்கு இதுபோன்ற நூல் தமிழில் பிறிதொன்றின்றென்பது அதனது விஷய அட்டவணையைப் பார்க்க நன்குவிளங்கும். இந்நூல் மோக்ஷவிச்சையுள்ள ஒவ்வொருவர்கையிலும் இன்றியமையா

திருக்கத்தக்கதாம்; சகலவேதாந்த சாஸ்திரங்களையும் எளிதிலறிந்துகொள்வதற்கு ஓர் தீபம்போல்வதாம்.

கலிகோ விலை அணு 12. ராபர் விலை அணு 10.

## நாநாஜீவவாதக் கட்டளை

(குறிப்புரையுடன்). திருத்தமான இரண்டாவது பதிப்பு.

ஆரம்பத்தில் வேதாந்தம் படிப்பவர்களுக்கு இப்புத்தகம் பெரிதும் உபயோகமாயுள்ளது. உபாத்தியாயர் சகாயமில்லாமலே இதனால் வேதாந்தத்தின் பிரக்கிரியைகளெல்லாம் நன்றாய்த்தெரிந்து கொள்ளலாம். இப்புத்தகம் படிப்பவர்கள் வேறு எந்த வேதாந்த புத்தகங்களையும் படிப்பதற்கு அதிகாரிகளாவர்; நூதனமாக எழுதப்பட்ட குறிப்புரையுடன் கூடிய புதிய பதிப்பு. இதற்கு ஸ்ரீராமகிருஷ்ணபரமஹம்சரின் சிஷ்யர்—சுவாமி ஸ்ரீராமகிருஷ்ணானந்தரவர்களும், கோயிலூர் ஸ்ரீபொன்னம்பல சுவாமிகளவர்களும், தஞ்சை ஸ்ரீதுப்புசாமிராஜு அவர்களும் நல்லபிப்பிராயம் கொடுத்திருக்கின்றனர். விலை அணு 4.

## திருக்குறள்-பரிமேலழகருரை,

தெளிபொருள் விளக்கம், கருத்துரை, குறிப்புரை.

விலை ரூபாய் 6.

இப்புத்தகம் டிம்மி 8 பக்கங்கொண்ட அளவில் 1300 பக்கங்களுக்கு மேற்பட்டது;2 வால்யமாகக் கலிக்கோ பைண்ட்செய்யப்பட்டது. உபாத்தியாயர் சகாயமில்லாமலே பரிமேலழகருரையின் அருமை பெருமைகளையெல்லாம் இதனால் நன்றாகத் தெரிந்துகொள்ளலாம். தெளிபொருள் விளக்கம். கருத்துரை, குறிப்புரைகள் பரிமேலழகருரைக்கிணங்கப் புதிதாக எழுதப்பட்ட முதற் பதிப்பு.

4. சர்வதரிசன சங்கிரகம்—சம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு, இதிற் சார்வாக தரிசனமுதல் சாங்காதரிசன மீறாக 16 மதசித்தாந்தங்க ளடங்கியிருக்கின்றன. ரூ. 2—8—0.

## திருவாசகம்.

இது பிழையறப்பரிசோதித்து

உயர்ந்த கிளேஸ் கடிதத்தில் அச்சிடப்பட்டுள்ளது.

பாக்கெட்சைஸ் 5½X3½ அங்குலம் அளவு.

காலிக்கோ பைண்ட் விலை அணு 10,



தோத்திரக்கோத்து. விலை அணு 1.

இதில் ஔவையா ரருளிச்செய்த விநாயகரகவல் வேழமுகம், கபிததேவ ரருளிச்செய்த இரட்டை மணிமாலை உலகநீதி, நக்கீரதேவாருளிச்செய்த விநாயகரகவல் திருமுருகாற்றுப்படை அடங்கியிருக்கின்றன

| | | | | |
|---|---|---|---|---|
| அத்துவிதவுண்மை (ராயல் 32 பேஜில்) | ... | ... | | |
| வேதாந்தப் பிரதீபம் (வினா விடை) | .. | 0 | 1 | 0 |
| ஆத்திசூடி மூலமும் பாகியார்த்தமும் ஆந்தரார்த்தமும். | ... | 0 | 12 | 0 |
| தாயுமான சுவாமிகள் பாடல்-பாடபேதத்துடன் | ... | 0 | 6 | 0 |
| மனனமாலை | ... | 0 | 3 | 0 |
| | ... | 0 | 1 | 0 |



அச்சில்.

1. தருக்காமிர்தம்—சரியான மொழிபெயர்ப்பு.
2. பிரஸ்தானபேதம்—சம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு
3. பெருந்திரட்டு (குறுந்திரட்டுடன்)

| | | |
|---|---|---|
| வேதாந்த சூளாமணி உரை | ... | ரூ அ பை |
| கைவல்யம் பொன்னம்பலசுவாமிகள் உரை | ... | 1—4—0 |
| பிரம்மோபநிடதம் | ... | 2—0—0 |
| ஆருணிகோபநிஷத் | ... | 0—8—0 |
| கௌஷீதகி பிராமணோபநிஷத் | ... | 0—3—0 |
| பரமஹம்சோப நிஷத் | ... | 1—4—0 |
| அமிர்தநாதோ பநிஷத் | ... | 0—4—0 |
| அமிர்தபிந்தூபநிஷத் | ... | 0—3—0 |
| வள்ளலார் சாஸ்திரம் | ... | 0—3—0 |
| தசகாரியமகாவாக்கியம் | ... | 1—8—0 |
| திருக்குதிருசியவிவேகம் | ... | 0—8—0 |
| ஞானக்கட்டளை | ... | 0-14—0 |
| குசேலோபாக்கியானம் உரை | ... | 0—2—0 |
| குறள் மூலம் | ... | 3—0—0 |
| நன்னூல் மூலம் | ... | 0—4—6 |
| விநோதரச மஞ்சரி | ... | 0—1—0 |
| சுகவனேசர் ஆரூடசக்கிரம் | ... | 1—2—0 |
| அணியிலக்கணம் | ... | 0—1—0 |
| பட்டணத்தார் புராணம் | ... | 0—4—0 |
| | | 1—0—0 |

| | | |
|---|---|---|
| சௌந்தரியலகரி உரை | ... | 0—6—0 |
| நாலடியார் உரை | ... | 1—2—0 |
| பிரபுலிங்கலீலை செய்யுள் | ... | 0—8—0 |
| ஷை வசனம் | ... | 0-12—0 |
| திருக்காளத்திப்புராணம் | ... | 0—6—0 |
| மகாதேவமாலை | ... | 0—1—0 |
| வாசகக்குறி | ... | 0—0—6 |
| சூதசங்கிதை (தமிழ்) | .. | 1—8—0 |
| கந்தபுராணம் செய்யுளும் வசனமும் வால்யம் (2) | ... | 6—0—0 |
| மானிடமர்மசாஸ்திரம் | ... | 5—0—0 |
| ஆரிய தர்மம் | ... | 0—0—6 |
| காட்வாட்ஹோ (இங்கிலீஷ்) | ... | 0—2—0 |
| கீதாசாரத்தாலாட்டு | ... | 0—1—0 |
| வைசியகுல விளக்கம் | ... | 0—4—0 |
| சூதசங்கிதை முத்திகாண்டம் | ... | 1—0—0 |
| திருநூற்றந்தாதி | ... | 0—4—0 |
| வியாயச்சாயனம் | ... | 0—6—0 |
| சௌந்தரவல்லிக்கதை (தமிழ் நாவல்) | ... | 1—0—0 |
| சந்திரகாந்தா (ஷை) | ... | 0-12—0 |
| இராஜாம்பாள் (ஷை) | ... | 0-12—0 |
| சுகதேவி (ஷை) | ... | 0—8—0 |
| விஜயலட்சுமி (ஷை) | ... | 0—6—0 |
| பக்தவிலாசம் | ... | 1—8—0 |
| யதார்த்தவாதம் | ... | 1—0—0 |
| ஜோஷியம் அம்மணீயம் அய்யாசாமீயம் | ... | 0—8—0 |
| மாலைமாற்று | ... | 0—4—0 |
| கிரிஸ்து மதக்கண்டனம் | ... | 0—3—0 |
| அத்வைத விளக்கம் | ... | 0-12—0 |
| சிவநாம சங்கீர்த்தனம் | ... | 0—4—0 |
| சிதம்பர மகாத்மியம் | ... | 0—4—0 |
| மாணிக்கவாசகசுவாமிகள் கீர்த்தனை | ... | 0—7—0 |
| கட்டளைக் கொத்து | ... | 0—8—0 |
| மெய்ஞானக் கொம்மி | ... | 0—4—0 |
| நவக்கிரக அர்ச்சனை | ... | 0—2—0 |
| ருக்குமாங்கத சரித்திரம் | ... | 0—6—0 |
| நித்தியாநு சந்தானம் | ... | 0—4—0 |



| | | |
|---|---|---|
| சாந்தி விலாசம் | ... | 0—4—0 |
| தஞ்சை சமஸ்தான சரித்திரம் | ... | 0—1—0 |
| நாயக்க ராஜவம்ச சரித்திரம் | ... | 0—2—0 |
| அத்வைத உண்மை | ... | 0—4—0 |
| திருமந்திர விசாரணை | ... | 0—4—0 |
| துவித்சைவ மறுப்பு | ... | 0—4—0 |
| ஜீவகாருண்ய விளக்கம் | ... | 0—6—0 |
| விஷ்ணு சகஸ்திர நாமம் கிரந்தம் | ... | 0—0—9 |
| ஷை கித்தான் பயிண்டு | ... | 0—2—0 |
| க்ஷத்திர சூடாமணி (क्षत्रचूडामणि) | ... | 0-14—0 |
| சிவதத்துவ விவேகம் (கிரந்தம்) | ... | 1—8—0 |
| ஜீவேந்திர ஜம்பு ( जीवेन्द्रचम्पू ) | ... | 1—0—0 |
| தசாவதாரப்ரபாவம் (ஸ்ரீமந்நாராயணன் பத்து அவதாரம் எடுத்த விஷயத்தைப்பற்றி ஸம்ஸ்க்ருதத்திலிருந்து தமிழில் வசனமாக, ஸ்திரிகளுக்கும் புருஷர்களுக்கும் முக்கியமானது | | 1—0—0 |
| வ்யாஸர் செய்த ப்ரஹ்மசூத்திரம் (அதாவது வேதாந்த சூத்திரம், ஸ்ரீபாஷ்யம் என்று பெயர் ஸமஸ்கிருதத்திலிருந்து ப்ரதிபதத்துடன் சங்கர ராமாநுஜ நீலகண்ட மத்வபாஷ்யத்தை தமிழ் வசனமாக யெழுதப்பட்ட வேதாந்த சாஸ்திரம் சுலபமாய் தெரியும் | | 3—0—0 |
| பராசரஸ்மருதி கலியுகதர்மசாஸ்திரம் பிராமண, க்ஷத்திரிய, வைசிய சூத்திரர், முதலானவர்களுக்கு ஆசாரம், ப்ராயச்சித்தம், சூதகம் முதலானதுகளை சொல்லப்பட்டு இருக்கிறது | | 1—2—0 |
| தசோபநிஷத், சங்கர, ராமாநுஜ, மத்வபாஷ்யங்களை ப்ரதிபதத்துடன் தமிழில் மொழி பெயர்ப்பு நல்ல காகிதம் | | 6—0—0 |
| யஜுர், ஸாம, ருக், சந்த்யாவந்தனம், புருஷ ஸூக்தம், ஸ்ரீஸூக்தம், பூஸூக்தம், நீளாஸூக்தம், நாராயண ஸூக்தம், சங்கர, ராமாநுஜ, மத்வ, பாஷ்யங்களைப்ரதிபத்துடன் தாத்பர்யமும் 3-வேத அமாவாஸ்ய தர்ப்பணங்கள், திருவாராதனம், விஷ்ணுஸஹஸ்ர நாமம் பரஹ்மயஞ்யம் ஸ்மார்த்த தேவதாபூஜை இவை முதலானதுகள். | | 1—4—0 |

| | |
|---|---|
| பகவத்கீதை ப்ரதி பதத்துடன் சங்கர ராமாநுஜ மத்வபாஷ்யத்தை தமிழ் மொழிபெயர்ப்பு | 1—4—0 |
| கல்கி புராணம் ; (தசாவதாரத்தில் கடைசி அவதாரம்) ஸம்ஸ்கிருதத்திலிருந்து தமிழ் வசனமாய் கலியுகவிசித்திரத்தையும் அக்ரமத்தையும் சொல்லப்பட்டு யிருக்கின்றன கங்காபுராணம், சேதுபுராணம், காவேரி புராண சருக்கங்கள் வசனத்துடன் | 1—2—0 |
| நவக்ரஹ ஸ்தோத்ரம் சுலோகம் தமிழ் அக்ஷரம் தமிழ் | 0—2—0 |
| சிவஸஹஸ்ரநாமம், கணபதி, லலித, சுப்பிரமண்ய சிவஅஷ்டோத்தரம் சுலோகம் தமிழ் அர்ச்சிக்கிற தமிழ் | 0—4—0 |
| பகவத்கீதை வசனம் ... ... ... | 0-12—0 |
| வடகலை குருபரம்பராப்ர பாவம் மூவாயிரபடி ஆராயிரபடி ப்ரமாண திரட்டுடன் | 1—0—0 |
| தென்கலை குரு பரம்பராப்ரபாவம் மூவாயிரபடி ப்ரமாணத்துடன் மணவாள மஹாமுனிசரித்தது | 1—0—0 |

விலாசம், புஸ்தகம் வேண்டுவோர்கள்.

வி. கோவிந்தன் அண்டு பிரதர்ஸ்,

அச்சுஆபீஸ்க்கு யெழுதவும்

தஞ்சாவூர்.






